


# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 6 விளைச்சல் : 56 திருவள்ளுவர் ஆண்டு 2055, சிலை – சனவரி – 2025



# உளவியல்துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Attachment theory | – | உறவுக்கருத்துக் கோட்பாடு |
| Behavioral therapy | – | நடத்தை மருத்துவம் |
| Cognitive psychology | – | அறிதிறன் உளவியல் |
| Cognitive therapy | – | அறிதிறன் மருத்துவம் |
| Conflict resolution | – | மோதல் தீர்வு |
| Coping mechanisms | – | ஈடுகட்டு உத்திகள் |
| Decision making | – | தீர்வுச் செயல்முறை |
| Developmental psychology | – | மேம்பாட்டு உளவியல் |
| Emotional intelligence | – | உணர்ச்சி நுண்ணறிவு |
| Emotional stability | – | உணர்ச்சி நிலைத்திறன் |
| Emotional support | – | உணர்ச்சிசார் உதவி |
| Fear conditioning | – | அச்சப் பயிற்சி |
| Free association | – | கட்டற்ற தொடர்பு |
| Group dynamics | – | குழு இயக்கவியல் |
| Learned helplessness | – | கற்ற கையறுநிலை |
| Mindfulness meditation | – | மனக்குவிப்பு ஊழ்கம் |
| Obsessive compulsive disorder (OCD) | - | கட்டாய வினைச் சிந்தை |
| Peer pressure | – | இணை அழுத்தம் |
| Personality traits | – | ஆளுமைக்கூறுகள் |
| Positive reinforcement | – | நேர்மறை உறுதிப்படுத்தல் |
| Post traumatic stress disorder (PTSD) | – | உளவியல் பின் பாதிப்பு அழுத்தம் |
| Psychometrics | – | உளவியல் அளவீடுகள் |
| Role conflict | – | பாத்திர மோதல் |
| Self efficacy | – | தன்செயல்திறன் |
| Social behavior | – | குமுக நடத்தை |
| Stress management | - | உளவழுத்த மேலாண்மை |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2055, சிலை (மார்கழி)
**சனவரி – 2025**

ஆசிரியர் : திருமதி **க. பவானி**
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் **வே. கார்த்திக்**

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai-28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

"தமிழன் என்றோர் இனமுண்டு
தனியே அவர்க்கொரு குணமுண்டு"

என்பார் நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கனார். பண்பட்ட வாழ்வுக்குப் பாருக்கே முன்சான்றாகத் திகழும் பெருமை கொண்டது தமிழினம். பண்டைத் தமிழர்கள் பயன்படுத்தி வந்த மழை அளவை முறை குறித்து, தமிழன்பர் ஒருவர் கட்செவியில் எழுதியுள்ள செய்தியொன்றை இங்கே குறிக்கின்றேன். இச்செய்தியின் வழியாக அற்றைத் தமிழர்களின் நுண்மாண் நுழைபுலத்தை அறிந்துகொள்ளலாம்.

புவியீர்ப்பு விசை காரணமாக மேகங்களில் இருந்து விழும்நீர் மழையாக பொழிகிறது. மழைபொழியும் பொழுது மழையின் அளவை அளப்பதற்கு " மழைமானி " ( மழை அளவி) எனும் கருவி பயன்படுத்தப்படுகிறது. மழைநீர் ஒரு நீர்மம் (திரவம்) என்பதால் ' மில்லி லிட்டர்' எனும் ( பன்னாட்டு முறை ) அளவிடும் அலகிலேயே மழையளவை அளக்கிறார்கள். ஒரு மில்லி மீட்டர் மழை அளவு என்பது, ஒரு சதுர மீட்டர் பரப்பளவில் ஒரு லிட்டர் மழைநீர் வீழ்ந்திருக்கிறது என்பதாகும். இவ்வழி முறையினைக் கொண்டே தற்காலத்தில் மழையளவு அளக்கப்படுகிறது. பண்டைய காலத்தில் தமிழர்கள் எப்படி மழையின் அளவை அளந்தார்கள் என்றால்..., மழைபொழிவைக் கணக்கிட நம் முன்னோர்கள் ஆட்டுக்கல்லையே (இட்டலி, தோசைக்காக மாவு அரைப்பதற்கான இயந்திரம்) பயன்படுத்தினார்கள்.

வீட்டுக்கு வெளியே வைக்கப்படும் ஆட்டுக்கல் குழியில் மழை நேராக பெய்து அக்குழியை நிரப்பும். ஆட்டுக்கல்லில் நிரம்பியிருக்கும் நீரை விரலால் அளந்து பார்த்து அது ஓருழவுக்கு ஏற்ற மழையா, ஈரழவுக்கு ஏற்ற மழையா என்பதை முடிவுசெய்வர். மழைப்பொழிவினை 'செவி' அல்லது 'பதினு' முறையில் கணக்கிட்டார்கள். இது 10 மில்லி மீட்டர் அல்லது 1 சென்டி மீட்டர் மழைக்கு நிகரானது. மழையின் அளவுக்கும், நிலத்தின் ஈரப்பதத்துக்கும் தொடர்பு உண்டு. இதனைப் 'பதினை' என்பர்.

5 சென்டி மீட்டர் அளவுக்கு மழைபெய்தால் அதனை 'ஒருழவு மழை' என்பர். அதாவது, நிலத்தில் ஓர் அடி ஆழத்துக்குத் தண்ணீர் இறங்கியிருந்தால் அதையே ஓருழவு மழை என்பர். இந்த ஓருழவு மழையால் ஏர்கலப்பை கொண்டு இலகுவாக மண்ணில் ஓரடி ஆழத்துக்கு உழவு செய்யலாம். நிலத்தை உழும்போது ஏர்க்கால் இறங்கும் அளவுக்கு நிலம் நனைந்திருக்கும். விதை விதைக்க இது போதுமான மழையாகும். மழையின் அளவைப் பொறுத்து ஓருழவு, ஈருழவு, ஐந்து உழவு எனக்கணக்கிடுவர். ஐந்து உழவுக்குமேல் மழைபெய்தால் ஆற்றில் வெள்ளம் கரைபுரண்டு ஓடும். தமிழர்களின் ஆறாம் அறிவின் உச்சமே " ஆட்டுக்கல் மழைமானி "

இன்னும் தமிழின் வளமை பற்றியும் தமிழர் பெருமை பற்றியும் அறிந்துகொள்வதற்கு நிறைய செய்திகள் உள்ளன. அவற்றைப் படித்தறிந்து பரவலாக்கம் செய்வோம்.

தமிழைச் சொல்வோம்...! தமிழால் வெல்வோம்...!

# மொழிஞாயிறு ஞா.தேவநேயப் பாவாணர்

(07.02.1902- 15.01.1981)



**முனைவர் இரா.கு.ஆல்துரை**

தமிழ்நாட்டரசின் சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருதுபெற்றவர்

காலந்தோறும் தனிப்பட்டவரது பங்களிப்பு மொழிவளர்ச்சிக்குப் பெருந்துணையாக இருந்திருக்கிறது. மொழி வரலாற்றில் பழமையான இலக்கியங்கள், இலக்கணங்கள் ஆகியன இன்றியமையாத இடம் பெறுகின்றன. அந்த இலக்கிய இலக்கணங்களைப் படைத்தோர் தனிப்பட்டவர்களாக இருப்பது இங்கு நினைவு கூரத்தக்கது. பழங்காலத்து இலக்கணங்களை அளவுகோலாக வைத்து இலக்கியங்களைப் பார்க்கும் பார்வை இன்றளவும் இருக்கிறது. இதேபோல அவ்வக்காலத்தில் தனிப்பட்ட புலவர்கள், அறிஞர்கள் ஆகியோரின் பங்கு குறிப்பிட்டத்தக்க இடத்தைப் பெறுகின்றது

மொழி என்பது அடிப்படையில் பேச்சொலியால் ஆனது. அவ்வாறு இருக்கும்போது இலக்கியம் படைத்த புலவர்களின் பங்கு எவ்வாறு மொழியில் தாக்கம் விளைவிக்கும் எனக் கருதலாம். நம்நாட்டில் இலக்கிய இலக்கணங்கள் பெருமளவில் போற்றப்பட்டு வருகின்றன. பழங்கால இலக்கிய இலக்கண மரபுகள் தொடர்ந்து வர வேண்டும் என்று பலரும் விரும்புகின்றனர். அதனால் அவற்றின் தாக்கம் மொழியில் இருக்கத்தான் செய்கிறது. மொழியின் திரிபிற்கு இந்த இலக்கிய இலக்கணங்களின் தாக்கம் பெருமளவிற்குத் தடை போட்டுள்ளது. அவ்வகையில் சென்ற நூற்றாண்டில் தோன்றிய மொழி ஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணரின் பங்கு தமிழ் மொழி வரலாற்றில் குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழ்மொழி ஆய்விலேயே ஐம்பது ஆண்டுகள் மூழ்கித் திளைத்தவர் மொழி ஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர். இப்படிப்பட்ட பேரறிஞர் ஒருவரைத் தமிழகம் இந்நாள்வரை கண்டதே இல்லை. இவர் வாயினின்று சரமாரியாக ஆராய்ச்சிக் கருத்துகள் தொடர்ந்து மணிக்கணக்கில் வந்துவிழும். அதேபோல் இவர் எழுத்துகள் தெளிவான நடையுடன் கருத்துகளை விளக்குவனவாயிருக்கும். இவரதுநடை தனிச்சிறப்பானது. பண்டைய உரையாசிரியர்களின் உயர்நடை இவரது படைப்புகளில் தெறிப்பதைக் காணலாம்.

தமிழ் வரலாற்றில் இதுவரை யாரும் முனைந்து ஏற்காத சொல்லாய்வுத் துறையை இவர் ஏற்றுக்கொண்டார். தமிழ் பற்றிய பல புதிய கருத்துகளை இவர் ஆய்வு வெளிப்படுத்தியுள்ளது. இவர் எடுத்துக் கொண்ட முயற்சி அரியது. தமிழ்மொழி வரலாற்றில் பழம்பெரும் இலக்கண ஆசிரியரான தொல்காப்பியருக்குப் பின் தமிழ் தன்னை நிலைப்படுத்திக் கொள்ள கொண்ட பெரும் முயற்சி பாவாணருடையது ஆகும். மொழியாராய்ச்சி அதிலும் குறிப்பாகச் சொல் ஆராய்ச்சியில் தன்னை முழுவதும் ஈடுபடுத்திக் கொண்டார்.

சொல்லாராய்ச்சி தொல்காப்பியர் காலத்திலேயே தமிழ்நாட்டில் அறிந்திருந்த கலையானாலும் விரிவான முறையிலும் நெறிப்பட்ட வகையிலும் அறிந்தது அண்மைக் காலத்தில் மேனாட்டாரிடமிருந்தே. இக் கலையில் ஈடுபட்டுத்தமிழ் மொழியின் சொல் ஆற்றலையும் சொல்வளத்தையும் விளக்கிய பெருமை பாவாணரையே சாரும். மேநாட்டு அறிஞர்களான மாக்கசுமுல்லர் (Max Muller), திரஞ்சு (Trench), கால்டுவெல் (Bishop Caldwell) கண்காணியார் போன்றோரின் சொல்லாராய்ச்சி, மொழியாராய்ச்சி ஆகியன பாவாணரை மொழியாய்வில் ஈடுபடுத்தியன. இவற்றைத் தழுவி தமிழில் சொல்லாய்வையும் மொழியாய்வையும் விரிவாகக் கொண்டு சென்றார் பாவாணர். திராவிட மொழியியல் நன்கு வளராத காலத்தில், 50 ஆண்டுகளுக்கு முன் மொழியியல் நூல்களும் கட்டுரைகளும் எழுதி முன்னோடியாகத் திகழ்ந்தார்.

பாவாணரது தமிழ் ஆய்வு தமிழ் மொழிப் பரப்பு முழுவதையும் உள்ளடக்கியது. மொழியியல், வரலாறு, இலக்கணம், பண்பாடு, சமயம், உரை போன்ற அனைத்து வகையிலும் தம் முத்திரையைப் பதித்துள்ளார். தாம் ஒரு படைப்பாளியாகவும் திகழ்ந்தார். மரபுப் பாக்கள் பலவும் இயற்றியுள்ளார். அவரது பாக்கள் தனிப் புத்தகங்களாகவும் வெளிவந்துள்ளன. திருக்குறளுக்கு இவர் எழுதிய உரை அரிய ஆய்வுக் குறிப்புகளைக் கொண்டதாகும்.

இவரது படைப்புகளில் பெரும்பான்மையானவை தமிழ்மொழியில் அமைந்துள்ளன. ஆங்கிலத்தில் எழுதப்பட்ட நூல்களும் கட்டுரைகளும் சில உள்ளன அவற்றுள் முதன்மை வாய்ந்தது The Primary Classical Language of the World (1966).

இவருக்குத் தமிழ் இலக்கியத்தில், குறிப்பாகப் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் நல்ல பயிற்சி உண்டு. இலக்கணத்தில் திறமை பெற்றவராகத் திகழ்ந்தார். பழந்தமிழ் இலக்கணங்களில் இடம் பெறாத பல இலக்கணக் குறிப்புகளைச் சுட்டிக்காட்டியுள்ளது இவரது தனித் தன்மையைக் காட்டுவதாகும். இலணக்கணத்திற்கு ஆராய்ச்சிக் குறிப்புகளும் வரைந்துள்ளார். பள்ளி மாணவர்களுக்குப் பயன்படும் வகையில் Wren and Martin புத்தகத்தைத் தழுவி தமிழில் கட்டுரை வரைவியல் என்ற பெயரில் புத்தகம் எழுதியுள்ளார். அப்புத்தகம் இலக்கணம், கட்டுரை வரைவியல் ஆகியனவற்றை விளக்குவனவாக உள்ளன.

தமிழ் மொழியில் நல்ல புலமையுண்டு. ஆங்கில மொழியிலும் புலமை உண்டு. மேலும் கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகிய இன மொழிகளிலிருந்தும் இலத்தீனம், கிரேக்கம், எபிரேயம், இந்தி, மராத்தி, நேப்பாளம் போன்ற பல மொழிகளில் இருந்தும் பல சான்றுகளைக் காட்டித் தாம் விளக்க வந்தவற்றை விளக்கும் ஆற்றல் பெற்றவர். அகரமுதலி, இலக்கணம் ஆகியவற்றையும் கருத்தூன்றிப் படித்துள்ளார்.

பாவாணரது ஆய்வுநெறியில் தமிழ்ச்சொல்லுக்குக் குடும்ப மொழிகளில் இனச்சொல் காட்டுவதோடு நிற்காமல் பிற குடும்ப மொழிகளிலிருந்தும் பல சொற்களுக்கு இனச்சொல் காட்டியுள்ளார். குறிப்பாக இலத்தீனம், கிரேக்கம், எபிரேயம் போன்ற மொழிகளிலிருந்தும் இனச்சொல் காட்டியுள்ளார். இவ்வாறு உலக மொழிகளுக்கு இடையே ஒப்புமை காட்டியிருப்பது பிற்கால ஆராய்ச்சியாளர்க்குப் பெரும் துணையாக இருக்கும். இந்த வகையில் இந்தோ ஐரோப்பிய மொழி அறிவியல் என்னும் இதழில் (The Journal of Indo-European Studies) சுடீபன் இல்யர் இலெவிட் (Stephen Hillyer Levitt) என்பவர் இந்தோ ஐரோப்பிய மொழிகளுக்கும் திராவிட மொழிகளுக்கும் இடையே காணப்படும் மேலும் சில உறவுகள் என்னும் தலைப்பில் சூன் 2000 திங்களில் வெளியான கட்டுரையில் மொத்தத்தில் பெருமளவில் பாவாணர் தமிழ்ச் சொற்களுக்கும் இந்தோ ஐரோப்பிய மொழிச்சொற்களுக்கும் இடையே காட்டியுள்ள ஒப்புமைகள் பொருத்தமானவையாகவும் கூர்ந்து கருதத்தக்கனவாகவும் உள்ளன என்று குறித்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இவ்வாறு உலக மொழிச் சொற்களுக்கிடையே காணப்படும் சொல் ஒப்புமை மொழி வரலாற்றில் சிறப்பான இடத்தைப் பெறும்.

07.02.1902 இல் பிறந்த பாவாணர் ஆசிரியராகத் தம் பணியைத் தொடர்ந்தார். பின்னர் உயர்நிலைப் பள்ளித் தமிழ் ஆசிரியராகவும், கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகவும், பல்கலைக்கழக வாசகர் (Reader) ஆகவும் பணியாற்றியுள்ளார். இவர் மொத்தம் ஓராண்டு காலம் நடுநிலைப் பள்ளியிலும் 22 ஆண்டு காலம் உயர்நிலைப்பள்ளிலும் 12 ஆண்டு காலம் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகவும் 5 ஆண்டுகாலம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வாசகராகவும் பணியாற்றியுள்ளார்.

பாவாணரது இளமைக்கால விருப்பம் ஆங்கிலம் கற்று எருதந்துறைப் பல்கலைக்கழகத்தில் பணிக்குச் செல்லவேண்டும் என்பதாகும். இதனை அவரே குறித்துள்ளார். குறிப்பாகச் செகப்பியர் நாடகங்களைக் கற்று அத்துறையில் பேராசிரியராக விளங்க வேண்டும் என்பதே அவரது அவா. ஆனால் தமிழ் கற்றுத் தமிழாசிரியரான பின்பு தமிழல்லாத மொழியில் பேச மாட்டேன் என்று சூளுரை மேற்கொண்டார். அப்படி தம் வாழ்நாள் முழுமையும் நடந்து காட்டினார். அதுவும் செந்தமிழிலேயே பேசிவந்தார். தமிழைக் கொச்சை, திரிபு ஆகியவற்றிலிருந்து மீட்டெடுத்துச் செந்தமிழ் ஆக்க வேண்டும் என்பதே அவரது வாழ்நாள் குறிக்கோளாக இருந்தது. இவரது இந்த மொழிப் போக்குப் பலரைத் தூண்டியது. இவர் வழியைப் பின்பற்றி பலர் பேசியும் எழுதியும் வருகின்றனர். இம் முயற்சியால் தமிழில் கலந்த பிறமொழிச் சொற்கள் பல நீக்கப்பட்டன. தமிழ் தூய தமிழாக மாறியது.

பாவாணர் தமிழ் நாட்டின் பல இடங்களில் பணியாற்றினார். அதனால் அவருக்குத் தமிழ்நாட்டின் நாட்டுப்புற வழக்குகள், பழமொழிகள், பண்பாட்டுக் கூறுகள், கிளை வழக்குகள் போன்ற அனைத்தும் அத்துப்படியாய் இருந்தன. இவர் தம் 30ஆம் அகவையில் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதத் தொடங்கினார். தம் 79ஆம் அகவையில் இறக்கும் தறுவாயிலும் ஆராய்ச்சிச் சொற்பொழிவு நிகழ்த்தி மறைந்தார். இப்படித் தம் வாழ்நாள் முழுமையும் ஆராய்ச்சியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். தாம் விளக்க வரும் கருத்துக்கு இலக்கியம், இலக்கணம், வரலாறு, நிலநூல், அறிவியல் நூல் போன்ற பல துறைகளிலிருந்து சான்றுகள் தந்து விளக்குவார்.

பாவாணர் தம் வாழ்நாள் முழுமையும் வறுமைக்கிடையே தம் ஆய்வை மேற்கொண்டார். புத்தகங்கள், அகரமுதலிகள், இலக்கணநூல்கள் போன்றவற்றை வாங்குவதிலேயே தம் வருமானத்தின் பெரும் பகுதியைச் செலவழித்துள்ளார். அவரது சொந்த நூலகத்தை அவர் இறந்த பின் தமிழ்ப் பல்கலைக்கழகம் 1982இல் உரூபா ஓர் இலக்கம் கொடுத்து வாங்கியது.

அறிவியல், மொழிநூல், இலக்கணம் போன்ற துறைகளில் பல சொற்களுக்குத் தமிழில் உரிய கலைச்சொற்கள் படைத்துள்ளார். அதுவும் அல்லாமல் கலைச்சொல்லாக்கத்தைப் பற்றிய நெறிமுறைகளையும் விளக்கியுள்ளார். இவரது கலைச்சொற்கள் சுருக்கமானவையாகவும், தெளிவானவையாகவும், மொழிமரபைப் பின்பற்றுவனவாகவும் திகழ்கின்றன

பாவாணரது புத்தகங்களைத் தமிழ்நாட்டில் உள்ள பெயர் பெற்ற பதிப்பகத்தினர் வெளியிட்டுள்ளனர். இவரது கட்டுரைகளைத் தமிழ்நாட்டி லிருந்து வெளிவரும் ஆராய்ச்சி இதழ்கள் வெளியிட்டுள்ளன. இவரது நூல் வெளியீட்டிற்குச் சிலர் மன்றங்கள் அமைத்துப் பொருளீட்டி அவற்றின் வழியே வெளியிடச் செய்தனர். இவ்வாறான பெருமை தமிழ்நாட்டில் வேறு எந்த அறிஞரும் பெறவில்லை.

பாவாணரது வாழ்நாள் பணிகளுள் அவர் மிக உயர்ந்ததாகக் கொண்டிருந்தது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி. அந்த அகரமுதலி ஆக்சுபோர்டு ஆங்கில அகரமுதலியைப் போன்று 13 மடலங்களாகவும் 32 பகுதிகளாகவும் வெளியிட வேண்டும் என்று திட்டமிட்டிருந்தார். இத்திட்டத்திற்குப் பொதுமக்கள் மாதந்தோறும் ஆளுக்கு உரூபா 10/- அனுப்பி ஊக்குவித்தனர். பின்னர் தமிழ்நாடு அரசால் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் ஏற்படுத்தப்பட்டு அதற்குப் பாவாணர் முதல் இயக்குநராக அமர்த்தப்பட்டார். அவர் இயக்குநராக அமர்த்தப்பட்டபோது அவருக்கு அகவை 72. அவர் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலியின் முதல் மடலம் முதல் பகுதியை முடித்தார். 1981இல் இயற்கை எய்தினார். அவரது மறைவுக்குப்பின் இவ்வியக்ககம் மீதமுள்ள பகுதிகளை வெளியிட்டுள்ளது.

மொழியியல் தொடர்பான உள்நாட்டு வெளிநாட்டு அறிஞர்களின் கருத்துகள் பலவற்றைத் தமிழுக்குக் கொண்டு வந்த பெருமை இவரைச்சாரும். குறிப்பாக மாக்கசுமுல்லர், திரஞ்சு கண்காணியர், கால்டுவெல், மோரிசு சுவிடேசு போன்றோரின் கருத்துகள் பலவற்றைத் தாம் மேற்கொண்ட பொருளுக்காகச் சான்றாகக் காட்டுவார். அதே நேரத்தில் அவ்வறிஞர்களின் கூற்றுகள் சிலவற்றைக் காரண காரியங்களுடன் மறுத்துள்ளார்.

பாவாணர் பெயரில் தமிழ்நாட்டில் பல ஊர்களிலும் நகரங்களிலும் பெங்களூரு, தங்கவயல், புதுச்சேரி போன்ற நாட்டின் பிற பகுதிகளிலும் மலேசியா, இலங்கை சிங்கப்பூர் போன்ற நாடுகளிலும் மன்றங்கள் அமைக்கப்பட்டு மொழி ஆய்வும் பண்பாட்டாய்வும் நடைபெற்று வருகின்றன.

பாவாணரைப் பற்றியும் அவரது ஆய்வைப் பற்றியும் பல நூல்கள் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. பாவாணர் பங்களிப்பு தொடர்பாக ஆய்வியல் நிறைஞர், முனைவர் பட்ட ஆய்வுகளும் மேற்கொள்ளப் பட்டுள்ளன.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் பாவாணர் பெயரில் அறக்கட்டளை சொற்பொழிவு ஏற்படுத்தப்பட்டுள்ளது.

தமிழ் நாட்டரசு பாவாணர் புத்தகங்கள் அனைத்தையும் நாட்டுடமை ஆக்கியுள்ளது. பாவாணர் நூல்கள் பல பதிப்புகள் சென்றுள்ளன. பாவாணர் நூற்றாண்டை ஒட்டி பல பதிப்பகத்தாரும் தனியாரும் பாவாணர் நூல்களை மறுபதிப்பு வெளியிட்டனர்.

மொழி சொற்களால் ஆனது. சொல்லாய்வு மொழி ஆய்வுக்குத் துணை நிற்பது. ஆங்கிலம், பிரஞ்சு, சமற்கிருதம், மராட்டி, நேப்பாளம் போன்ற மொழிகளுக்குச் சொற்பிறப்பியல் அகரமுதலி வெளிவந்துள்ளன. ஆனால் தமிழுக்குச் சென்ற நூற்றாண்டின் இறுதிவரை சொற்பிறப்பு அகரமுதலி வரவில்லை. இத்துறையில் சிலர் முயன்றும் வெற்றி பெற முடியவில்லை. ஆனால், பழந்தமிழ் இலக்கணமான தொல்காப்பியம் 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்று கூறியதற்கு இணங்க தமிழ் சொற்கள் அனைத்துக்கும் வேர் காண முடியும் என்று அறுதியிட்டுச் சொன்னவர் பாவாணர். அம்முயற்சியில் ஈடுபட்டுப் பல சொற்களுக்கு வேரும் விளக்கமும் சொன்னதோடு எஞ்சிய சொற்களுக்கு வேர்காணும் முறையையும் வகுத்துக் காட்டியுள்ளார்.

பிறமொழிகளில் வந்துள்ள சொற்பிறப்பு அகரமுதலிகள் எல்லாம் ஒப்பியல் நோக்குடையன. திராவிட மொழிகளுக்கு எமினோ, பர்ரொ ஆகியோர் தொகுத்த சொற்பிறப்பு அகரமுதலியும் ஒப்பியல் நோக்கில் அமைந்ததே. ஆனால், பாவாணரின் அகரமுதலி சொற்களின் மூல வேரினைக் காணும் நோக்குடையது.

பாவாணர் தமிழ் நாட்டின் நான்கு முதலமைச்சர்களின் (பேரறிஞர் அண்ணாதுரை, கலைஞர் மு. கருணாநிதி, திரு. ம.கோ. இராமச்சந்திரன், செல்வி செ. செயலலிதா) பாராட்டுதலைப் பெற்றவர். பல மன்றங்களும் அரசும் பாவணருக்குப் பட்டங்கள் கொடுத்துச் சிறப்பித்துள்ளன. பாவாணருக்குப் பெருமை சேர்க்கும் வகையில் அவர்தம் மணிவிழா பாவாணர் பற்றாளர்களால் கொண்டாடப்பட்டது. ஒன்றிய அரசு அவர் நினைவாக அஞ்சல் தலை வெளியிட்டுள்ளது. இவை அனைத்தும் அவர்தம் ஆராய்ச்சிக்குக் கிடைத்த பரிசுகளாகும்.

# கருப்பும் கறுப்பும்



– ஞா. தேவநேயப் பாவாணர்

ஒருசார் புலவர், சொற்களின் முன்வடிவையும் பின் வடிவையும் முற்பொருளையும் பிற்பொருளையும் ஆய்ந்தறியாது, முன் வடிவெல்லாம் வழுநிலை யென்றும் பின் வடிவே வழாநிலையென்றும் வலிக்கின்றனர். கருமை குறித்த சொல்லின் கருப்பு, கறுப்பு என்னும் இருவடிவுகளுள், முன்னதே முன்னதாம். இம் முடிவிற்கு ஏதுக்கள் மூன்று,

அவையாவன :

1. கள் எனும் வேர்ச்சொல்லினின்று கரு என்னும் வடிவே முந்தித் தோன்றல்.

கள் – கர் – கரு – கறு,
ஒ.நோ: குள் – குர் – குரு – குறு;
முள் – முர் – முரு – முறு(வளை)
தெள்–தெறு, வெள்–வெறு, என்பவற்றில் றகரவடிவு நேரடியாகத் தோன்றியிருப்பினும், அவை ரகர வடிவாகிய இடைநிலையில்லாதன. கறு என்பதோ அவ் இடைநிலையை உடையது. ரகரத்தின் வன்மையே றகரமாதலால், ரகரமே முந்தியதாம். நெடுங்கணக்கிலும் ரகரம் முன்னும் றகரம் பின்னும் வைக்கப்பட்டிருத்தல் காண்க.

ஒளிர் – ஒளிறு, முரி–முறி (வளை) என்பனவும் றகரத்தின் பின்மையைக் காட்டும்.

2. கருமை குறித்த சொற்களுள், மாபெரும்பாலனவும் இருவகைப் பண்டை வழக்கும் ரகரத்தையே கொண்டிருத்தல்.

எ–கா :

தனிச்சொற்கள் :

கரம்பை, கரி, (அடுப்புக்கரி), கரிசல், கரிச்சான், கரியவன் (திருமால்), கருக்கம் (கருமுகில்), கருக்கல், கருக்கு, கருகல், கருப்பை, (கருப்பெலி) கார், காரி (கருங்காளை)

கூட்டுச்சொற்கள் :

கரிக்குருவி, கரிக்கோடு, கரிச்சட்டி, கரித்துணி, கரிமா, கரியடுப்பு, கரியமால், கரியமான், கருகுமணி, கருங்கடல், கருங்கரப்பான், கருங்கல், கருங்களமர், கருங்காடை, கருங்காணம், கருங்காந்தள், கருங்காலி, கருங்காவி, கருங்கிளி, கருங்குட்டம், கருங்குதிரை, கருங்குரங்கு, கருங்குருவி, கருங்குவளை, கருங்குளவி, கருங்குறுவை, கருங்கொண்டல், கருங்கொல், கருங்கொள், கருங்கோழி, கருங்கோள், கருஞ்சம்பா, கருஞ்சாந்து, கருஞ்சாமை, கருஞ்சாரணை, கருஞ்சாரை, கருஞ்சிவப்பு, கருஞ்சீரகம், கருஞ்சுரை, கருஞ்செவ்வாப்பு, கருஞ்சேரா, கருஞ்சோளம், கருந்திருக்கை, கருந்தேள், கருநந்து, கருநாகம், கருநாடு, கருநார், கருநாரை, கருநிமிளை, கருநெய்தல், கருநெருஞ்சி, கருநெல்லி, கருநொச்சி, கரும்படை, கரும்பலகை, கரும்பிள்ளை, கரும்பிறை, (கரும்பளிங்கு) கரும்புடையன், கரும்புல் (பனை), கரும்புள், கரும்புள்ளி, கரும்புற்று, கரும்புறா, கரும்பூனை, கரும்பேன், கரும்பொன், கருமணித் தக்காளி, கருமணல், கருமணி, கருமருது, கருமலை, கருமா, கருமுகில், காரரிசி, காராடு, காராளர், காரெலி, காரெள், காரொக்கல்

3. றகரங் கொண்ட வடிவு வழிப்பொருட்கே ஏற்றமை. இற்றைத் தமிழ் நூல்களுள் முதலதான தொல்காப்பியத்தில், "கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள" (855) என்று, கறுப்பு என்னும் சொல் சினப்பொருளைக் குறிப்பதாகவே கூறப்பட்டுள்ளது. கறுத்தவரும் சிவந்தவருமாக இருவகை நிறத்தார் தமிழகத்துத் தொன்றுதொட்டுளர். சிவப்பு என்றது பொன்னிறத்தையும் செம்பொன்னிறத்தையும். சினத்தினால், கரியர் முகம் மிகக் கருக்கும்; சிவப்பர் முகம் மிகச்சிவக்கும்; கண் இருநிறத்தார்க்கும் சிவக்கும்.

"செறுவர் நோக்கிய கண்தன்
சிறுவனை நோக்கியுஞ் சிவப்பா னாவே"
(புறம் : 100) என்னும் புறப்பாட்டடியைக் காண்க.

பொருள் மாறும்போது சொல்வடிவும் மாறவேண்டுமென்பது சொல்லாக்க நெறிமுறையாதலால், கருப்பு என்னும் சொல் சினத்தைக் குறிக்கும்போது கறுப்பு என்றாயிற்று.

"வசையுநர்க் கறுத்த பகைவர்"
(பதிற்றுப். 32:15)

கறுத்தோர் = பகைவர்.

"கறுத்தோ ருறுமுரண் தாங்கிய"

(பதிற்றுப். 66:9)

கறு–கறுவு=நீள்சினம், மனவயிரம்.

"கறுவி வெகுண்டுரைப்பான்" (திரிகடு. 46)

கறுத்தல் = மங்கிச் சிறிது கருத்தல், எ.டு : கறுக்கன் வெள்ளி.

கறுப்பு = கறை, குற்றம், தழும்பு, கருமேகநோய்.

கறு – கறை = கருத்த களங்கம். "கறைமிடறு" (புறம். 1:5)

கறை = களங்கம், மாசு, குற்றம், உறைந்து கருத்த அரத்தம்.

கறுப்புக் கட்டுதல் = பயிர்முதிர்ந்து இருண்ட பச்சைநிறங் கொள்ளுதல்.

கறுத்தல் = முற்றுதல். "கௌவை கறுப்ப" (மதுரைக். 371)

கறுப்புவெற்றிலை = இருண்ட பச்சை வெற்றிலை.

பச்சை, நீலம், கருப்பு மூன்றும் ஓரின நிறங்களாதலால், பயிர் முற்றி இருண்டபசுமை யடைதல் கறுத்தல் எனப்பட்டது.

இங்ஙனம் வழிப்பொருள்கட்கே கறுப்பு என்னும் வடிவம் உரியதாம். ஆயினும், 10ஆம் அல்லது 11ஆம் நூற்றாண்டினதான பிங்கலந்தையில் கறுப்பு என்னுஞ் சொற்குக் கருமைப் பொருள் குறிக்கப்பட்டுவிட்டதனால், அதற்குப் பிற்பட்ட இலக்கியத்தில் அது அம் முதற்பொருளிலும் வழங்கலாயிற்று.

கம்பராமாயணம், நகர் நீங்கு படலம் 58ஆம் செய்யுளில், கறுத்தாய் என்னும் வடிவம், பொறுத்தாய், இறுத்தாய், வெறுத்தாய் என்னும் ஏனையடி முதற்சீர்கட்கு எதுகையாக வந்ததாகக் கருதலாம். அதே வனப்பில், இலங்கை காண்படலம், 47ஆம் செய்யுளில், நாள் என்னும் சொல், யாழ், வாழ், பாழ் என்பனவற்றிற்கு எதுகையாக நாழ் என்று வந்திருத்தல் காண்க. "ஓர் கறுப்பு மில்லாத" என்னும் படிக்காசுப் புலவர் பாட்டிலும், "ஆர்கறுப்பன்," "பேர்கறுப்பன்" என்பனவற்றிலுள்ள றகரம் எதுகைபற்றியதே.

பொதுவாக, பிற்காலத்திலக்கியத்தில் சொற்கள் சிறப்புப் பொருள் கருதாது மோனையெதுகைத் தொடை யொன்றேபற்றி ஆளப்பட்டுள, ஊடல், புலவி, துனி என்னும் மூன்றும் மூவேறு நிலையைக் குறிப்பனவாயினும், ஒரே பொருளில் ஆளப்பட்டிருத்தலைக் காண்க.

ஆதலால், கறுகறுத்தல் (மிகுந்த கருநிறமடைதல், இலக்கண விளக்கம், 325, உரை), கறுத்த காக்கட்டான் (கருங்காக்கணம், யாழ்ப்பாண அகராதி), கறுத்தகார் (குறுவை நெல்வகை), கறுத்தவன் (கருநிறமுடையவன்) கறுத்தவுப்பு, கறுப்பன் (கரியவன்),

கறுப்புக் கட்டுதல், கறுப்புக் கன்னிமார், கறுப்புக் காஞ்சொறி, கறுப்புக் குங்கிலியம், கறுப்புக் கொள், கறுப்புத்தாமர், (ஒருவகை மரம்), கறுப்புத்தேயிலை, கறுப்புப்பயறு, கறுப்புப்புள்ளி, கறுப்புப்பூலா, கறுப்பு மட்டிவாய், கறுப்பு மணித்தக்காளி, கறுப்புவரால், கறுப்பு வவ்வால், கறுப்பு வீரம் (விளக்குக்கரி) முதலிய பிற்கால இலக்கிய வழக்கும் அகர முதலி வழக்கும் கொள்ளத்தக்கனவல்ல.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதியில், வரச்சூலை, வரட்சி, வரட்சுண்டி, வரட்சூலை, வரட்சொறி, வரட்டடைப்பான், வரட்டி, வரட்டுதல், வரட்டு, வரட்டுச் சோகை, வரட்டுப்பசு, வரள், வரள்வாயு என றகரம் வரவேண்டிய சொற்களையெல்லாம் ஒழுங்காய் ரகரமிட்டுக் குறித்திருக்கின்றனர். இவை சரியாமா?

தூய கருநிறத்தைக் குறிக்கும் சொல்லெல்லாம் ரகரத்தைக் கொண்டவை யென்றும், சினம், கறை, முதிர்ச்சி முதலிய வழிப்பொருளைக் குறிப்பனவெல்லாம் றகரத்தைக் கொண்டவையென்றும், தெரிந்துகொள்க. மரவயிரம் கருத்தும் சிவந்தும் இருக்குமாதலால், கருத்ததைக் கருப்பு என்றும் சிவந்ததைச் சேகு என்றும் சொல்லல் வேண்டும்.

இனி, கருப்பு என்னும் சொல் பஞ்சம் என்னும் பொருட்கேயுரியதாகச் சிலர் கருதுவர். கருப்பு இருளையும், இருள் துன்பத்தையும் நாட்டுத் துன்பங்களுட் கொடிய பஞ்சத்தையும் குறிக்கும். அதனாலேயே,"அத்தமிக்கும் போதில்" என்னும் காளமேகம் பாட்டுச் சொற்றொடர்க்கு, பஞ்சகாலத்தில் என்றும் பொருள் கூறப்படும். இங்ஙனம் அணிவகைப் பொருள்கள் எல்லா நிறப் பெயர்கட்குமுண்டு.

எ–கா : கருப்பு = பேய், வயிரம், சாராயம்.

வெள்ளை = வெளுத்த ஆடை, சுண்ணாம்பு, வெள்ளாடு, வெண்பா, கள்ளமின்மை, தெளிவு.

பச்சை = இழவு வீட்டிற் கொடுக்கும் பயறு, இடக்கர், பச்சை மையிற் குத்திய தொய்யில், மொழியின் இயல்பு நிலை.

சிவப்பு = மாணிக்கம் (சிவப்புக்கல்), சினம்,

மஞ்சள் = காமாலை

நன்றி – தமிழ்ப்பாகை எழுத்தாளர் மன்றச் சிறப்பு மலர் 1964–65

# சொல்லும் பொருளும்... வேர்ச்சொல் பார்வை

இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா



## தூணம் வேர்ச்சொல் விளக்கம்.



உல்==> திரட்சிப் பொருள் வேர்.

உல்> துல்>துர்> திர்>திரள்

உல்>துல்>துர்>திர்>திரு= திரண்ட செல்வம், சிறப்பு

துல்>தூல்>தூன்>தூண்= திரட்சிப்பெற்று உறுதியாய் நிற்கும் கம்பம் .

உல்>துல்>தூண்>> தூண்+அம்= தூணம்

அம்= பெருமைப் பின்னொட்டு

தூணம்= நிலத்தில் ஊன்றப் பெற்ற பெருந்தூண்.

நிலை> நிலையம், விளக்கு> விளக்கம், மதி> மதியம் என்பது போல் தூண்> தூணம் என்றானது.

எனவே தூண் வடிவில் இருக்கும் கே. எல் டவரை கோலாலும்பூர்த் தூணம் என்று அழைக்கலாம்.

Tower > a lofty building, standing– a lone or forming part of another; to rise into the air; to stand on high. என்கிறது சேம்பர்சு அகரமுதலி .

O.Fr. tur > L. turris, a tower

துல்> துள்> துர்> tur >turris

tur> tor>tour ~ Mdl. Eng

tur > tor> torr ~ old Eng.

tour >towr >towre ~ scots

toer ~ W.Frs

toren ~ Dut

இவ்வாறு மேலை இந்தோ ஐரோப்பிய மொழிகளில் இச்சொல் திரிபுற்று வழங்குகிறது.

இதன் மூலம் தமிழே என்கையில் நாம் பேருவப்பெய்துகின்றோம்.

டவர் எனபதற்குப் பகரமாக கோபுரம் என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர். கோயிலில் நுழைவாயிலில் எழுப்பப்படும் உயர்மாடத்தைக் கோபுரம் என்பர்.

கோ~~ அரசன்

( கோல் > கோன் > கோ = அரசன்

கோ+ இல்= கோயில் ==> அரசன் இல்லம். வழிபாட்டுத்தலம் )

புரம் ==> வளைவாகக் கட்டடம் கட்டி அமைக்கப்பெற்ற ஊர்.

புல்>புர்>புரம். (நாகப்புரம், சிங்கப்புரம், இராமநாதப்புரம்)

கோபுரம் ==> உயர்ந்த கட்டடம்.

Twin tower > இரட்டைக் கோபுரம்.

ஆங்கிலத்தில் இதற்கும் டவர் என்றே பயன்படுத்தப்படுகிறது.

இரட்டைக் கோபுரமும் கோலாலும்பூர்த் தூணமும் வெவ்வேறு வடிவின.

எனவே தூண் வடிவில் அமைக்கப் பெற்றதைத் தூணம் என்பதே சிறப்பு.

(From Middle English tour, tur, tor, from Old French tour, toer, tor and Old English tūr, tor, torr ("tower; rock"; > English tor), both from Latin turris ("a tower"). Compare Scots tour, towr, towre ("tower"), West Frisian toer ("tower"), Dutch toren ("tower"), German Turm ("tower"), Danish tårn ("tower"), Swedish torn ("tower"), Icelandic turn ("tower"), Welsh tŵr. See also tor.

## பச்சைத் தண்ணீர்



பச்சைத் தண்ணீர் எனச் சொல்லுதல் கூடாது என்று நான் பள்ளியில் பயில்கிற வேளையில் ஆசிரியர் சொல்லிக் கொடுத்தார் .

ஆனால் எனக்குள் ஆய்வும் தொடர்ந்து நடந்து கொண்டுதான் இருந்தது.

பச்சை என்பது நிறத்தைக் குறிப்பிட்டாலும் அந்நிறமானது பசுமையையே குறிப்பிடுகிறது . பசுமை என்பதும் பச்சையே.

ஆங்கிலத்தில் fresh milk, fresh water, fresh vegetables, fresh meat என எழுதுவதை நாம் பார்த்திருப்போம்.

Fresh எனும் ஆங்கிலச் சொல்லுக்குப் பொருத்தமான தமிழ்ச்சொல், நம் தமிழ் மக்களால் இயல்பாகவே பயன்படுத்தப் பட்ட பச்சை எனும் சொல்லேயாகும்.

பசும்பால் > fresh milk

பச்சைத் தண்ணீர்> fresh water

பச்சைக் காய்கறிகள் >fresh vegetables

பச்சை இறைச்சி> fresh meat

எனவே பச்சைத் தண்ணீர் என நம் மக்கள் வழக்கில் பயன்படுத்தியது பிழையன்று என்பதை நான் உணரலானேன்.

நிரையில் நிறை கண்ட தோட்டத்துத் தமிழன்



நிரை நம் தோட்டப்புறத் தமிழிரிடையே அதிகம் புழங்கிய சொல்.

நீர்>நிர்>நிரை

நீர்>நேர்

நிரை நேராக வீற்றிருக்கும் வரிசை. வரி அடுக்குப் பத்தியும் நிரை எனப் பட்டதாகப் பாவணரின் உயர்தரக் கட்டுரை இலக்கணத்தில் பார்க்கிறோம் .

தோட்டத்தில் நொய்வ மரங்கள் நேர் வரிசையில் நடப்பட்டிருக்கும். ஒரு நிரையில் மரம் சீவும் ஒருவர் ஏனைய நிரையில் மரம் சீவும் ஒருவருடன் ஒலி எழுப்பித் தொடர்பு கொள்ளும் வழக்கம் இருந்தது. பக்கத்து நிரையில் உள்ளார் பேசிக் கொள்வதும் வழக்கம் .

நீர் நேர் நிரை நிரல் முதலான சொற்கள் எளிய மக்களிடத்தும் வழக்கில் உள்ளவையே.

நீர் இளகியது. இளகிய நீர் நகரும். ஒரு கோட்டில் முறையாய் நகர்வதால் முறையும் ஒழுங்கும் நீர் என்றும் நேர் என்றும் அழைக்கப்பட்டன.

நீர்மை நேர்மை முதலான சொற்கள் ஒழுங்கையும் முறையையும் உணர்த்தின.

சீர்மை சிறப்பொடு நீங்கும் பயன்இல
நீர்மை உடையார் சொலின்

என நீர்மை குறித்துக் கூறுவார் வள்ளுவர்.

பயனிலவற்றை நீர்மையுடையார் சொல்லுதல் பண்பன்று என்கிறது வள்ளுவம். சீர்மை சிறப்பும் சேர்த்து விலகி விடுமாம்.

எளியர் நெஞ்சில் நின்று வாயில் நாளும் ஒலித்த நிரை இன்று எங்கே?

நிரையில் நிறை கண்ட தோட்டத்துத் தமிழனின் பிறங்கடைதாம் நாம் நிரையை நிறைவாய் வழங்கினோமா?

Dolphin >>> ஓங்கில் ஓர் ஆய்வு



தமிழில் மீன் என்பதை மீனம் என்றும் கூறுவர். மீன் வடிவில் இருக்கும் உடுமீன் கூட்டத்தின் தொகுப்பு மீனம் என்று அழைக்கப்பெற்றது.

Daulphin (fr)> Delphinus (L)> delphis (Gr.)> phinos.

மீன் >மீனம்>மீனஸ்>பீனஸ்( phinos).
Phinos> phish > fish

இது தமிழிலிருந்து ஆங்கிலத்தில் மீன் திரிந்த முறையைக் காட்டும்.

கடலில் குதித்துக் குதித்து நீந்திச் செல்லும் திமிங்கில வகை மீன். இம்மீனுக்குக் கடல்பன்றி என்று தமிழ் அறிஞர்கள் பெயரிட்டனர். கடற்குதிரை, கடல்நாய், கடற்சிங்கம் என்றிருப்பது போல் கடற்பன்றி எனப் பெயரிட்டனர் போலும். இருப்பினும் இம்மீனுக்கு இப்பெயர் பொருந்துமாறில்லை. அறிஞர் அருளி திறவழையன் என இம்மீனுக்குச் சொல் உருவாக்கம் செய்தார். இதுவும் ஒருவகை கடிசொல்லே. மீன்களில் இது திறமையுடையதாலும் வழவழப்புடையதாலும் இப்பெயரிட்டதாகக் கருத்து தெரிவித்தார். அறிஞர்களின் அறிவாண்மையை நாம் குறைத்து மதிப்பிட முடியாது. இருப்பினும் அனைத்தாலும் பொருந்தும் வகையில் எளிய மக்களாலும் உருவாக்கப்படும் எளிய சொல்வழக்கே நிலைப்பாடு உடையதாக அமையும். ஈழத்து மீனவர்கள் இம்மீனை ஓங்கில் என அழைக்கின்றனர் என அங்கிருந்து வந்த மீனவ அன்பர் ஒருவர் தெரிவித்தார். தமிழகத்தில் நான் நேரடியாக இராமேசுவரம் சென்று அங்குள்ள மீனவர்களைச் சந்தித்து இதனை உறுதிப்படுத்திக் கொண்டேன். தமிழக அகரமுதலிகளுள் தலைச்சிறந்ததாகக் கருதப்படும் கழகப் பேரகராதியில் ஓங்கில் என்பது ஒருவகை மீன் எனக் குறிக்கப்பட்டுள்ளதைக் கண்டேன். பிற்பாடு வெளியீடு செய்யப்பட்ட செந்தமிழ்ல்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் ஓங்கில் பற்றிய தெளிவான விளக்கம் பதிவிப்பட்டிருப்பது என் கருத்திற்கு வலுசேர்த்தது. இது எனக்குப் பேருவப்பைத் தந்தது.

இம்மீன் ஆழத்தை அறியக்கூடியதாம்.
"ஆழமறியும் ஓங்கில் மேளமறியும் அரவம்"
என்று ஒரு பழமொழியே உள்ளது. ஆழமறியக் கூடியதால் ஆழ்> ஆழ்ந்தி> ஆஞ்சில்> ஓஞ்சில்> ஓங்கில் எனப் பெயர் பெற்றதாகச் செந்தமிழ்ச்சொற் பிறப்பியல் அகர முதலியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஓங்கி, ஓங்கல், ஓங்கிற்சுறா முதலான சொல்வழக்குகள் நாம் அறிந்தவை. தோட்டப்புறங்களில் கனமானப் பொருளைத் தூக்கிப் பிறிதோர் இடத்தில் நகர்த்தி வைக்கும் உயர்ந்த கருவியை ஓங்கி என்று அழைத்தது நம் நினைவுக்கு வரும். இதனை ஆங்கிலத்தில் crane என்று அழைப்பர். அதேப் போல் உயர்ந்த மலையை ஓங்கல் என்று அழைப்பது இலக்கிய வழக்கு.

ஓங்கலிடை வந்துயர்ந்தோர் தொழவிளங்கி என்பது ஒரு பழம்பாட்டு வரி. செந்தமிழ்ச்சொற் பிறப்பியல் அகரமுதலி முதல் மடலம் மூன்றாவது

பாகத்தின் 398 பக்கத்தில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

ஓங்குதல்> அ) உயர்தல் 'ஓங்கிய வெண்குடை'

ஆ) பரவுதல் 'அகில முற்றுமா யோங்கிய கால்களும்'

இ) வளர்தல் 'செறிந்தொர் செம்மலா யோங்குபு'

ஈ) பெருமையுறுதல் ' ஓங்கு மெய்பொருட்கு மேலா மோரெழுத்து'

உ) பெருக்குதல் 'ஓங்கொளியா யோங்கி'

ஊ) மேலே பறிதல் 'உயங்கினா ளோங்கிற் றுயிர்'

எ) குமட்டுதல்

ஏ) உயர்த்துதல் ' அடிக்கக் கையோங்கினான் '

ஊ > ஓ> ஓங்கு

ஊ என்பது உந்தி மேலெழும் ஊகாரச் சுட்டு வேர் வித்து.

ஊ > ஊம்> ஊங்கு> உங்கு

ஊ > ஊங்கு> ஓங்கு. கீழிருந்து மேலெழும்பி உயர்ந்து நிற்பன.

ஓங்கு ஊ எனும் மூலத்திலிருந்து பிறந்தது. எனவேதான் ஓங்கி, ஓங்கில் , ஓங்கல் முதலானச் சொற்கள் மேலெழும்பி நிற்கும் உயர்வு பொருளைச் சுட்டி விளக்குகின்றன.

ஓங்கில் எனும் மீன் நீருக்கடியிலிருந்து மேலெழும்பிக் குதிப்பதால் இம்மீனுக்குச் சிறப்பாக இப்பெயர் அமைந்தது எனலாம். எனவே டோல்பீனுக்கு ஓங்கில் என்பதே பொருத்தமான பெயராகும்.

மாசித் தண்ணீர்



Grass Jelly Drink/ minuman cincau / lengkong என அழைக்கப்படும் குளிர்நீருக்குத் தமிழில் என்ன பெயர் என ஆராய்கையில்...தோட்டத்து மக்கள் பயன்படுத்திய அருந்தமிழ்ச் சொல் நினைவுக்கு வந்தது. அன்றைய மக்கள் பெரும்பாலும் நற்றமிழையே பயன்படுத்தினர்.

இந்தக் குடிநீரில் ஒருவகையான இழுது தன்மையில் அமைந்த கட்டிக்குழைவினைக் கலப்பார்கள். அது கரிய நிறத்தில் இருக்கும். இதற்குத் தமிழில் மாசி என்று பெயர். இச்சுவை நீரையும் மாசித் தண்ணீர் என்றுதான் கூறுவார்கள். மாசித்தண்ணீர் வாங்கிவா என்று பேசியதையும் நான் கேட்டிருக்கிறேன். நானும் பயன்படுத்தியிருக்கிறேன். மாசி என்று ஏன் சொல்ல வேண்டும்? தமிழகத்தில் இச்சொல் இப்பொருளைக் குறிக்கும் வகையில் பயன்பாட்டில் இருக்கிறதா என்பது தெரியவில்லை.

தமிழில் மாசி எனின் கருமை என்றே பொருளாகும்.

உல் >முல்>மல்= கருமை பொருள் வேர்.

மல்>மய்>மை= கண்ணுக்குத் தீட்டப்படும் கருமை.

மல்>மால்= கரிய நிற முகில்

மால்>மார்>மாரி= கரிய முகில் வழி பொழியும் மழை

மால்> மாலன்= கரிய நிறத்தவன்

மாலன், மாலவன், மாலோன்

மால்>மாய்= கருமை

மாய்>மாயம்= இருண்டு மறைதல்

மாய்> மாயவன் = கரிய நிறத்தவன்

மால் >மாய்> மாயோன் = கரிய முகில் வண்ணன்

மாயோன் மேய காடுறை உலகம்: தொல்காப்பியம்

மால்>மாய்>மாயு> மாசு= கரிய தன்மை கொண்ட குற்றம் , அழுக்கு

மனத்துக்கண் மாசுஇலன் : குறள்

மால்>மாய்>மாயி>மாசி = கரிய நிறத்தில் அமைந்த உடு மண்டலம், கரிய நிறத்திலான காய் (மாசிக்காய்)

கரிய நிறத்திலான சுவை நீரில் பயன்படுத்தப்படும் குழை. இக்கால் இதனை மலைநாட்டில் சின்சாவ் cincau என சீன மொழியில் அழைக்கின்றனர். தமிழராகிய நாம் மாசித் தண்ணீர் என மீண்டும் தமிழிலேயே அழைக்கும் நிலை வருமா.....

### உணத்தல்



தமிழில் ஒரு சொல்லின் நுட்பப் பொருளை அறியவும் அதன் மூலத்தை அறியவும் அதன் வேரினை அறிய வேண்டுவது இன்றியமையாதது. அக்னி என்பது வடமொழி வடிவமே. ஆயினும் அதன் வேர் மூலமோ தமிழாகும் என்பதை ஆராயின் புலப்படும். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியும் இதையேதான் தெரிவிக்கின்றது. தமிழ் வேரினைக் கொண்ட பல சொற்களை வேறு அயன் மொழிகளிலும் காட்டலாம். ஞானப்பிரகாச அடிகளார், மாகறல் கார்த்திகேயனார், தேவநேயப் பாவாணர் முதலானோர் இவ்வாய்வில் தெளிந்தவர். எத்தனையோ சொற்கள் இவ்வாறு திரிந்தும் மருவியும் சிதைந்தும் சில இடங்களில் தெளிவாகவும் பரந்து கிடக்கின்றன.

அக்கி நோய்க்கு மண்ணைப் பூசுவது அறிவியல் முறைப்படி ஆராய்கின்ற பொழுது எதிர்மறையான விளைவை ஏற்படுத்துகின்ற ஒன்றாயின் கைவிடுவதே நன்று. ஆனால் அம்முறை நோயைக் குணப்படுத்தினால் ஏற்றுக்கொள்ளலாம். சில வெறும் நம்பிக்கைகளாகப் பின்பற்றப்படுகின்றன. ஏற்புடைய சரியான நோயைக் குணப்படுத்தும் மருத்துவ முறையே நன்று. அக்கினியின் வேர் வெப்பத்தைக் குறிப்பதாகவே வேர்ச்சொல் ஆய்வழி தெரியவருகின்றது.

உண்ணம், உணாத்தல் முதலான சொற்களும் தூய தமிழ்ச்சொற்களே.

உல்> சுல்> சுர்> சுரீர்
உல்= குத்தல் பொருள் தரும் வேர்.
உல்> சுல்> சுலீர்

சூரிய வெப்பம் தலைக்கு மேல் சுலீர் எனக் குத்துகிறது என்பர். இதனைச் சுரீர் எனக் குத்துகிறது என்றும் கூறுவர். இச்சொல் வழியே சூரியன் எனும் சொல்லும் உருவாகியது. சூரியன் தமிழ்ச்சொல்லே.

உல்> உண்> உண்ணம்
உல்> உலர்= வெப்பத்தால் காய்தல்.
உண்ணம்> வடமொழியில் உஷ்ணமாகியது.

தோட்டப்புறத்தில் பெண்கள் தம் முடியைத் துணியால் அடித்து உலர வைப்பதை உணாத்துதல் என்பார்கள்.

Dry எனும் ஆங்கிலச் சொல்லுக்கு காய வைத்தல் , உணாத்தல், உலர்த்துதல் எனலாம்..

Oxygen> எனும் வளியின் வேர் மூலத்தை ஆய்கையில்
ஓர் உண்மை புலப்பட்டது.




உல்>அல்= கூர்மை / வெப்பப் பொருள் வேர்.
அல்>அள்>அடு= வெப்பம்.
அல்>அடு>அட்டு= வெப்பம்.
அட்டாலும் பால் சுவை குன்றாது.
உல்>அல்= கூர்மை.
அல்>அக்கு= கூர்மை, நுண்மை.
அக்கு>அஃகி= கூர்மை.

அஃகி அகன்ற அறிவு...~ குறள்.

அ ல் > அ ள் > அ ட் கு > அ க் கு > அ க் கி = வெப்பத்தால் உருவாகும் நோய்.

அக்கு>அக்கி>அக்கினி= தீ.

அக்கினி>>வடசொல் எனச் சொல்லப் பெற்றாலும் அதன் மூலம் தமிழே .

அல்>அக்கி> acid.

Acid>> ac = sharp.

கூரிய வெப்பம் குத்தும் குத்துவது எரிக்கும் . சூரியன் எனும் சொல்லும் சுல் எனும் குத்தல் பொருளில் வந்த வேர்ச்சொல்லாலானதே.எனவே, உல்>அல்>அள்>அட்டு= வெப்பம்,

அடு>அட்டில்

அடு>அடுப்பு

அல்>அக்கு>அக்கி= வெப்பம்

அல்>அஃகு= கூர்மை, நுண்மை

உல் > அல் எனும் தமிழ் வித்திலிருந்தே oxygen, acid முதலான ஆங்கிலச் சொற்கள் உருவானதாக நமக்குப் புலப்பட்டது.

Oxygen எனும் சொல்லுக்கு நாம் உயிர்வளி, தீயதை எனும் அருந்தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துகின்றோம்.

உயிர்கள் உயிர்க்க இவ்வளி உயிர்ப்பானதாகையால் உயிர்வளி என்றும் தீய்க்கும் தன்மையதால் தீயதை என்றும் நாம் கூறினோம். தீயதை இன்றி தீ எரியாது. இத்தீயதை குறிப்பிட்ட மாழைகளையும்( உலோகங்களையும்) தீய்க்கும்.

FrO==> Ferum oxyde ==> இரும்புத்தீயதை ஆகும்.

உண்ணும் உணவு தீய்க்கப் பெற்றுதான் செரிக்கிறது. இக்கால் ஆற்றலும் வெளிப்படுகிறது. எனவே உயிர்வளி , தீயதை முதலான அருந்தமிழ்ச் சொற்கள் அறிவியல் அருந்திறல் வல்லரால் உருவாக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இது போன்ற சொற்களை மேலும் ஆய்வோம் அறிவியல் தமிழை உயிர்ப்பிப்போம்.



## தவ்வு > தொவ்வு



சீனர்கள் அணியம் செய்யும் உணவுப் பொருள்களில் ஒன்று தவ்வு எனப்படும். நான் சீனர் புதுக்குடியிருப்பில் 20ஆண்டுகாலம் வாழ்ந்தவன். சீனர்களின் பல்வேறு பழக்க வழக்கங்களை அக்கால் பார்த்து அறிந்து கொண்டேன். சீனமொழியைத் சிறிதளவு மட்டுமே தெரிந்து கொண்டேன். காலத்தால் பலவற்றை மறந்து விட்டேன்.

சீனர்கள் தாமாக அணியம் செய்யும் உணவுப்பொருள்களைக் கண்டுள்ளேன். அவற்றுள் ஒன்றுதான் தவ்வு எனப்படுவது. இதனை நம்மவர்கள் தவுக்கான் என்று அழைத்தனர். இன்று நகர்ப்புறங்களில் வாழ்பவர்கள் இப்படிச் சொன்னால் சிரிப்பார்கள். ஆனால் தௌக்கான் என்றுதான் நாங்கள் சொல்வோம்.

இவ்வுணவுபல்வகையில் வடிவமைக்கப்பட்டு சமைக்கப்படுவதுண்டு. தௌக்கான் எனப்படும் தவ்வு நெகிழ் தன்மை உடையதாகவும் குழைவாகவும் இருக்கும். இக்கால் இதற்கான தமிழ்ச்சொல் ஒன்றினை உருவாக்க வேண்டும் என நான் எண்ணினேன் . இச்சொல் சீனத்திற்கு எப்படி வந்தது என ஆராய்ந்தேன்.

soy bean curd, 1876, from Japanese tofu, from Chinese doufu, from dou "beans" + fu "rotten."

என அதற்கு ஆங்கிலத்தில் விளக்கம் தரப்பட்டிருந்தது. பாலவரையை (Soya bean) ஊறவைத்து குழையச்செய்து மேலும் சிலவற்றைச் சேர்த்து நிறங்களையும் கலந்து வெயிலில் சிறிது உலரவைத்து பின்னர் சமையலுக்குப் பயன்படுத்துவர்.

தமிழில் தொய்> தொய்வு என்பது தளர்வையும் குறிக்கும். தளர்ந்தது குழைவுமாகும்.

தொய்> தொயை

தொய்> தொய்வு>தொய்வம்= தொய்வுத் தன்மையுடைய மரப்பாலால் ஆனப் பொருள் .

( Rubber)

Rubber ban > தொய்வ வளை

Latex > நொய்வம்

உல்>துல்>தொல்>தொய்

தொய்> தொவ்> தொவ்வு என ஆக்கம் பெறலாம். இச்சொல்லுக்கு வேறு பொருளும் இருத்தல் இயல்பு. வேர்ச்சொல் பொருத்தமும் ஒப்பொலி பொருத்தமும் இதற்கு இருப்பதால் தொவ்வு எனுஞ் சொல்லை இதற்கு ஆக்கஞ் செய்துள்ளேன்.

**மகன் > மான் ஆகிய கதை**

மகன் எனில் ஆண் எனப்பொருள்.

மகன் எனல் மக்கட் பதடி எனல் என்பார் வள்ளுவர். பயனில் சொல்பாராட்டுவானை இவ்வாறு திட்டுவார். இங்கே மகன் என்பது ஆண் மகனைக் குறிக்கின்றது. இருப்பினும். கருத்து இருபாலார்க்கும் பொதுவானதே. குறளில் சொல்லப்படும் கருத்துகள் ஆணை நோக்கியதாயினும் பெண்ணை நோக்கியதாயினும் சிலவேளை சிறப்பாயும் சிலவேளை பொதுவாயும் அமையும்.

மகன் என ஆணைக் குறித்த சொல் மான் எனத் திரியும். வழக்கில் இதனைப் பரவலாய்க் காணலாம்.

பெருமகன்> பெருமான்

மான் என ஆணைக் குறித்த சொல்லே Man என ஆங்கிலத்தில் வழங்குகிறது என்பது பாவாணர் ஆய்வு.

உன்> முன்> மன்
உன் = கூர்ந்து சிந்தித்தல்
உன்னுதல் = சிந்தித்தல்
உன்> முன் > முன்னுதல்= சிந்தித்தல்
முன்னுபவர் = முனைவர்
முனைவர்> முனிவர் ஆயிற்று.

வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல் நூலாகும்.
(தொல்.மர:640)

என்பது தொல்காப்பியம் .

மனம் எனும் அருந்தமிழ்ச் சொல் சிந்தித்தல் பொருளில் உருவாகிய சொல்லே. இதன் வேர்

உல்>உன்>முன்>மன்>மன் அம் > மனம் என வரிந்தமையும். சிந்தித்தல் பொருளில் அமைந்த மனத்தின் கருப்பொருளைத் தாங்கி மாந்தன் எனுஞ் சொல் உருவாகியிருகலாம். மன்> மனத்தின் படியாகவே மனிதனும் மாந்தனும் ஆகும்.

வடமொழியில் வழங்கும் மனு, மனுஷ்யன் எனும் சொற்களின் மூலம் தமிழின் மன்னேயாகும். பாவாணர் ஆங்கிலத்தின் Man எனும் சொல்லுக்குத் தமிழின் மகன் என்பதே மூலம் என்கிறார். மகன் திரிந்து மான் ஆகும்.

எடுத்துக்காட்டாக,
அகல்> ஆல்
துகள் > தூள்
பகல்> பால்

இவற்றைப் போலவே மகன் மான் ஆகும். ஆனால் man எனும் ஆங்கிலச் சொல்லுக்கு சமசுகிருத மனுவே மூலம் எனச் சில இடங்களில் கருத்து விளக்கம் செய்துள்ளனர்.

மார்க்கசு முல்லரின் பிழைபட்ட கருத்தால் சமசுகிருதமே முதன்மை மொழி என எண்ணியிருக்கும் உலகின் பார்வை பேரளவு மாறியிருப்பதாகத் தெரியவில்லை.

உன்> முன்>மன்> மனு என்பதே இயல்புநிலை. மனுவுக்கான வேரையே தமிழ்தான் காட்டும்.

Etymology. It is derived from a Proto-Indo-European root *man- (see Sanskrit/Avestan manu-, Slavic mǫž "man, male"). The Slavic forms (Russian muzh "man, male" etc.) are derived from a suffixed stem *man-gyo-.

இவ்வாறு விக்கிப்பீடியாவில் பதிவிட்டப் பட்டுள்ளது.

மனுவாக்கான வேரை சமசுகிருத்தில் தேட முடியாது. தமிழில்தான் காண முடியும் .

மார்க்கசுமுல்லரின் தவறான கருத்தை முறியடித்தவர் கால்டுவெல்டு. கால்டுவெல்டே தமிழை உயர்தனிச் செம்மொழி என்றும், சமசுகிருதத்தின் துணையின்றித் தனித்தியங்க வல்லது என்றும் கூறியவர்.

### தேயால் ஆன டே ( Day)





உ> உல்>துல்> தெல்>தெய்> தேய்> தீய்> தீ

தொடுதலால் உரசலும் உரசலால் தேய்த்தலும் தேய்த்தலால் தீயும் ஆனக் கதையை மேற்கண்ட சொல்லாய்வு நிறுவுகின்றது.

பொருள்கள் ஒன்றோன்று பொருதினால்தான் உரசிடல் முடியும். உரசல் தேய்த்தலாகும்.. தேய்க்கத் தேய்க்க சூடேறி தீ உருவாகும் என்பது அறிவியல்... சொல்லறிவியலும் அவ்வியற்கை அறிவியலையே உணர்த்துகின்றது. தேய்த்தலால் தீய் ஆகி, தீ ஒளி தருகின்றமையால் தேய் ஒளிப்பொருளுமானது. தமிழ் ஒளியாம் தேய்... மேலை மொழியில் சுடர்தரும் டேய் Day ஆகியது . ஒளியான Day ஆங்கிலத்தில் பகலையும் சுட்டி நிற்பதை நாம் அறிவோம்.

day (n.)

Old English dg "period during which the sun is above the horizon," also "lifetime, definite time of existence," from Proto-Germanic *dages- "day" (source also of Old Saxon, Middle Dutch, Dutch dag, Old Frisian di, dei, Old High German tag, German Tag, Old Norse dagr, Gothic dags), according to Watkins, from PIE root *agh- "a day." He adds that the Germanic initial d- is "of obscure origin." But Boutkan says it is from PIE root *dhegh- "to burn" (see fever). Not considered to be related to Latin dies (which is from PIE root *dyeu- "to shine").

From Middle English day, from Old English dæġ ("day"), from Proto-Germanic *dagaz ("day"), from Proto-Indo-European *$d^{h}og^{wh}$-o-s, from *$d^{h}eg^{wh}$- ("to burn").

Cognate with Saterland Frisian Dai ("day"), West Frisian dei ("day"), Dutch dag ("day"), German Low German Dag ("day"), Alemannic German Dai ("day"), German Tag ("day"), Swedish, Norwegian and Danish dag ("day"), Icelandic dagur ("day"). Cognate also with Albanian djeg ("to burn"), Lithuanian degti ("to burn"), Tocharian A tsäk-, Russian жечь (žeč', "to burn") from *degti, дёготь (djógot', "tar, pitch"), Sanskrit दाह (dáha, "heat"), दहति (dáhati, "to burn"), Latin foveō ("to warm, keep warm, incubate").

Latin diēs is a false cognate; it derives from Proto-Indo-European *dyew- ("to shine").

தக தக எனும் தமிழ்த்தொடரில் வரும் தக தேயிலிருந்து தோன்றியதாகலாம். தகதக தங்கத்திற்கு மூலம். தக தக வென மின்னுவது தங்கமாயிற்று. தக> தவ எனவும் மாறும். தீ தகதகவென எரிதலை வழக்கில் நாம் கண்டவர்தாமே.. எரிதல் போலும் துன்பத்தைத் தாங்குதலே தவமாயிற்று. தக> தவ> தவம். எரிதல் போல் நீர் விடாய் எடுப்பதால் தாகமும் ஆயிற்று. தகிப்பு, தவிப்பு முதலானவற்றுக்குத் தக மூலமானது. இறந்தாரை தீயிட்டு எரிப்பதைத் தகனம் என்கிறோம். எனவே தகத்திற்குத் தேய் மூலமானது தேய்க்கு உகரமே வித்து.

தேயே தேவானது. தேவே தேவனையும் தேவியையும் தந்தது.

தேய்> தேவ்> தேவு

தேவு> தேவன்

தேவு> தேவி

தேயே தெய்வத்திற்கும் தாய். தேயால் தீ ஆனதால் தெய்வு + அம்= தெய்வம் உருவாகியது. தெய்வம் வானுறையும் தெய்வமாகிய கதிரவனைக் குறித்தது.

தேய் ஒளியைச் சுட்டியதால் தேய்> தேஜ் என வடமொழி வடிவம் பெற்று தேஜஸ் ஆனது. உடல்

ஒளியைத் தேய் வழி தேஜஸ் என்றது வடமொழி.

# குடுமி

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"உச்சி வகுந்தெடுத்து பிச்சிப்பூ வச்ச கிளி
பச்சமலை பக்கத்தில மேயுதின்னு சொன்னாங்க
மேயுதின்னு சொன்னதில நாயம் என்ன கண்ணாத்தா
பட்டியில மாடு கட்டி பால கறந்து வச்சா
பால் திரிஞ்சி போனதின்னு சொன்னாங்க
சொன்னவங்க வார்த்தையிலே சுத்தமில்ல
அடி சின்னக்கண்ணு நானும் அத ஒத்துக்கல!"
(புலமைப்பித்தன், ரோசாப்பூ ரவிக்கைக்காரி)

********

அ > எ
பருமை – பெருமை.
பரியது – பெரியது.
"பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்."
(திருக்குறள் 599).

அ > ஒ
கடி – கடும் – கடுமை =மிகுதி.

கடும் சுழி நீத்தம் = பெருவெள்ளம்.
'கன்று கால் ஒய்யும் கடும் சுழி நீத்தம்'
(ஊட்டியார், அகநானூறு 68,: 17).
* இடி முழக்கத்துடன் மேகக் கூட்டம் மழை பொழிந்திருக்கிறது. வெள்ளம் கரைபுரண்டு ஓடுகிறது. குழந்தை யானையால் கால் ஊன்றி நடக்க முடியவில்லை.

'கடும்பனி அற்சிரம் நடுங்கக் காண்தக'
(நக்கீரர், நற்றிணை 86,: 4).
* கடிய முன்பனியையுடைய அற்சிரக்காலத்து;

கடும் – கொடும் = மிகுதி,
கடும் வெயில் = கொடும் வெயில்.
கடுமை – கொடுமை

கும் = திரள்
குமி = குவி = திரட்டு.
குவி – குவடு > கோடு, குடுமி = மலை உச்சி.

குடுமி = தலைமயிர்.
உச்சி முதற்கொண்டு பாதம் வரை = top to bottom (ஆங்கிலம்), cap *à pie* (பிரஞ்சு).

குடுமிக்கதவு = கீலின்றிக் கீழும்மேலும் உள்ள முனைகளால் ஆடும் கதவு.

"தாயர் அடைப்ப மகளிர் திறந்திடத்
தேயத் திரிந்த குடுமியவே – ஆய்மலர்
வண்டுலாஅங் கண்ணி வயமான்தேர்க்
கோதையைக்
கண்டுலாஅம் வீதிக் கதவு."
(முத்தொள்ளாயிரம் 2).

[குடுமி = கதவு சுழலும் தண்டு; ஆய் = அழகு; உலா = திரி; கண்ணி = ஆடவர் தலைக்குச் சூடும் மாலை; வயமான் = குதிரை]
பொருள்: அழகிய மலர்களாற் கோத்த வண்டு மொய்த்துத் திரியும் தலைமாலையைச் சூடியவனும் குதிரை பூட்டிய தேரில் திரிபவனுமாகிய சேரனைக் கண்டு அவன் உலாவும் வீதிகளின் வீட்டுக் கதவுகளைத் தாய்மார்அடைப்ப மகளிர் மீண்டுந் திறப்ப என்று மாறிமாறி நிகழவும் தேய்ந்து உருமாறிய கொண்டிகளை (கதவு சுழலும் தண்டுகள்) உடையவாயின.

* இக் கருத்தைப் பின்னர் வந்த கலிங்கத்துப்பரணியிலும் காணலாம்.

"வருவார் கொழுநர் எனத்திறந்தும்
வாரார் கொழுநர் எனவடைத்தும்
திருகும் குடுமி விடியளவும்
தேயும் கபாடம் திறமினோ.
(கலிங்கத்துப் பரணி 69).

கருத்து: விடியும் வரை கணவர் வருவார் எனக் கதவைத் திறந்தும் வாரார் என மூடியும்

தொடர்ந்து செய்வதால் கதவின் முளைப்பகுதிக் குடுமி தேயும்.

கொடுமுடி, குடுமியான் மலை போன்ற ஊர்ப்பெயர்கள் தமிழக மலைப்பகுதியில் உண்டு.

"சதிர் இள மடவார் தாழ்ச்சியை மதியாது
அதிர் குரல் சங்கத்து அழகர்தம் கோயில்
மதி தவழ் குடுமி மாலிருஞ்சோலை
பதியது ஏத்தி எழுவது பயனே!"

(நம்மாழ்வார், நாலாயிரத் தெய்வப் பனுவல் 2994).

* மதிதவழ் குடுமி = நிலாத் தவழும் உச்சியுடைய மலைசூழ் திருமாலிருஞ் சோலை.

"தவள மதி தவழ் குடுமிப் பனிவரையின்
முளைத்து எழுந்து தகை சேர் முக்கண்
பவளமலைதனில் ஆசை படர்ந்து ஏறிக்
கொழுந்துவிட்டுப் பருவமாகி
அவிழும் நறைப் பூம் கடப்பம் தாமரையும் ஈன்று
ஒரு கோட்டு ஆம்பல் ஈன்று
குவலயம் பூத்து அருள் கொடியைக் கோதை
குழல்வாய்மொழியைக் கூறுவோமே"

(குற்றாலக் குறவஞ்சி 4).

சாரைப்பாம்பு, தாம்புக்கயிறு போல உச்சிக்குடுமி இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

"குடுமி – தலையின் உச்சியில் இருப்பது."
(பாவாணர், ஒப்பியன் மொழிநூல் 1: 4).

"இடுமணல் முற்றத்து இன்இயம் கறங்கக்
குடுமிக் கூந்தலுள் நறு நெய் நீவி
நல்லவை நாப்பண் பல்சிறப்பு அயர்ந்து"

(பெருங்கதை, வத்தவ காண்டம் 2: 30–32)

* குடுமிக்கூந்தல் = உச்சிக்கூந்தல்.

தலைமயிர் நீக்குதல் = தலைமுடி வெட்டி ஒப்பனை செய்துகொள்ளல்.

'குடுமிகளைந்த நுதல்'

(இடைக்குன்றூர்க்கிழார், புறநானூறு 77: 2).

பொருள்: போருக்குச் செல்லுமுன் முடிநீக்கி மொட்டை அடித்த தலையில் குடிக்குரிய வேம்பையும், போருக்கு உரிய உழிஞையையும் அணிகிறான் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்.

சண்டை முற்றி ஒருவர் முடியை – கொண்டையை மற்றொருவர் வெட்டுவதை வெற்றியாகக் கருதும் வழக்கம் நாட்டுப்புறத்தில் இன்றும் இருக்கிறது.

"மதில்மிசைக்கு இவர்ந்த மேலோர் பக்கமும்
இகல் மதில் குடுமி கொண்ட
மண்ணுமங்கலமும்
வென்ற வாளின் மண்ணொடு ஒன்ற"

(தொல்காப்பியம், புறத்திணையியல் 13: 9–11).

"உரும்பு இல் சுற்றமோடு இருந்தோன் குறுகிப்
பொறி வரிப் புகர் முகம் தாக்கிய வய மான்
கொடு வரிக் குருளை கொள வேட்டு ஆங்கு
புலவர் பூண் கடன் ஆற்றிப் பகைவர்
கடி மதில் எறிந்து குடுமி கொள்ளும்
வென்றி அல்லது வினை உடம்படினும்
ஒன்றல் செல்லா உரவு வாள் தடக் கை
கொண்டி உண்டி தொண்டையோர் மருக!
மள்ளர் மள்ள! மறவர் மறவ!"

(பெரும்பாணாற்றுப்படை: 447–456).

* குடுமிகொள்ளுதல் = வெற்றிகொள்ளுதல்.

"அன்னாய் வாழிவேண்டு அன்னை நம்ஊர்ப்
பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும்
குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாடன் ஊர்ந்த மாவே!"

(கபிலர், ஐங்குறுநூறு 202).

உரை: தலைவி தோழியிடம் கூறுகிறாள்: தாயே, வாழ்க, உன்னை வேண்டுகிறேன். நம் ஊர்ப் பார்ப்பனச் சிறுவன் போல அவன் வந்த குதிரைக்கும் தலையில் குடுமி இருக்கிறதே!

* குதிரைக் குடுமிக்குப் பார்ப்பனச் சிறுமகன்குடுமி உவமை.

பறவைகள் தலை உச்சியும் குடுமி எனப்படும்.

'குடுமிக் கூகை குராலொடு முரல'

(மாங்குடி மருதனார், மதுரைக்காஞ்சி:170).

'குடுமிக் கோழி நெடுநகர் இயம்பும்'

(மிளைப்பெருங் கந்தனார், குறுந்தொகை

234: 4).

'மட மாத் தோகை குடுமியின் தோன்றும்'
( காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தங் கண்ணனார், குறுந்தொகை 347: 3)
* மடம் = இளமை; மா = கருமை; தோகை = மயில்; குடுமி = உச்சிக் கொண்டை;

'குடுமி எழாலொடு கொண்டு கிழக்கு இழிய'
(காப்பியாற்றுக் காப்பியனார், பதிற்றுப்பத்த 36,: 10).

* எழால் – தலையில் குடுமி கொண்டிருக்கும் ஆண்கழுகு.

மரத்தின் உச்சியும் குடுமி எனப்படும்.
'கொம்மைப் போந்தைக் குடுமி வெண் தோட்டு'
(குடவாயிற் குத்தினார், குறுந்தொகை 281: 2).
* கொம்மை = திரட்சி; போந்தை = பனை; குடுமி = மரஉச்சி; வெண்தோடு = குருத்தோலை

"எம் வெம் காமம் இயைவது ஆயின்
மெய்ம் மலி பெரும் பூண் செம்மல் கோசர்
கொம்மை அம் பசும் காய்க் குடுமி விளைந்த
பாகல் ஆர்கைப் பறைக் கண் பீலித்
தோகைக் காவின் துளுநாட்டு அன்ன
வறும் கை வம்பலர்த் தாங்கும் பண்பின்
செறிந்த சேரிச் செம்மல் மூதூர்
அறிந்த மாக்கட்டு ஆகுக தில்ல"
(மாமூலனார், அகநானூறு 15: 1–8).

உரை: எம்முடைய மிகுந்த விருப்பம் சரியாக அமைந்தால், மெய்ம்மையே நிறைந்த பெரிய கொள்கையாய்ப் பூண்ட தலைமை சான்ற கோசர்களின் – திரண்ட பசிய காய்களின் குடுமிப்பக்கம் பழுத்த பாகல்பழங்களை விரும்பி உண்ணும், பறை போன்ற கண்ணையுடைய பீலிகளையுடைய மயில்கள் வாழும் சோலைகளையுடைய – துளுநாட்டைப் போன்று, வெறுங்கையுடன் வரும் அயலவர்களை நன்கு விருந்தோம்பும் பண்புடைய நெருக்கமாக அமைந்த சேரிகளையுடைய தலைமையான முதிய ஊர்கள் அறிமுகம் உள்ள மக்களைக் கொண்டது ஆகுக.

உச்சியில் இருப்பதைக் குடுமி என்பதால் தேங்காய் உச்சியும் தேங்காய்க்குடுமி எனப்படுகிறது.

முன்பகுதியில் இருந்தால் முன்குடுமி,

"சுருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா சோற்றுப்
பொருக்குலர்ந்த வாயா புலையா –திருக்குடந்தைக்
கோட்டானே நாயே குரங்கே உனையொருத்தி
போட்டாளே வேலையற்றுப் போய்!"
(காளமேகப் புலவர்).
* வசைபாடக் காளமேகம் என்பது சரிதான் போலும்!

'சோழியன் குடுமி சும்மா ஆடாது.' என்ற பழமொழியும் இங்கு நினைவுகூரத் தக்கது.

'குழாயடிச் சண்டை குடுமிபிடி சண்டை' என்பது மக்கள் வழக்கு.

"உள்ளம் துரப்ப வந்தனென்; எள்ளுற்று,
இல் உணாத் துறத்தலின், இல் மறந்து உறையும்
புல் உளைக் குடுமிப் புதல்வன் பல் மாண்
பால் இல் வறு முலை சுவைத்தனன்
பெறாஅன்,"
(பெருஞ்சித்திரனார், புறநானூறு 160: 16–19).

"வேல்கைக் கொடுத்து, வெளிதுவிரித்து உடீஇப்,
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி,
ஒருமகன் அல்லது இல்லோள், 10
செருமுக நோக்கிச் செல்க என விடுமே!"
(ஒக்கூர் மாசாத்தியார், புறநானூறு 279: 8–11).

பொருள் : தன் ஒரே ஒரு மகனை, இளம் பிள்ளையை, பரந்துகிடந்த அவன் தலைமுடியை எண்ணெய் வைத்துச் சீவி முடித்து, வெண்ணிற ஆடையை உடுத்திவிட்டு, வேலைக் கையிலே கொடுத்து, "போர்க்களம் நோக்கிச் செல்க" என்று கூறி அனுப்பிவைக்கிறாளே! இவள் சிந்தைத் துணிவு கெட்டொழியட்டும். (மூதில் மகளிர் – மூத்த மறக்குடிப் பெண்டிர்).

* இப் பாடல்களில் குடுமி என்பது பொதுவாகக் கூந்தலை – தலைமயிரைக் குறிக்கும்

சொல்லாக உள்ளது.

'பண் அமை முழவும் பதலையும் பிறவும்:
(பரணர், பதிற்றுப்பத்து 41: 3).

"தபளா tapaḷā , n. < Arab. tabal. A kind of tabret; மத்தளவகை."
(தமிழ்ப் பேரகராதி).

பதலை – தபலா – தபேலா – தபளா எனத் திரிதல் போலக் குடுமி என்பது பேச்சுவழக்கில் குமுடி ஆதல் இயல்பே.
குடுமி – குமுடி > comet!

"தூமகேது புவிக்கு எனத் தோன்றிய
வாம மேகலை மங்கையரால் வரும்
காமம் இல்லை எனின், கடுங் கேடு எனும்
நாமம் இல்லை; நரகமும் இல்லையே."
(கம்பராமாயணம், மந்தரை சூழ்ச்சிப்படலம் 1516).

உரை: இந்த உலகில் உள்ளவர்க்குத் (தீமை விளைக்கத் தோன்றும்) வால் நட்சத்திரம் என்று சொல்லும்படி பிறந்துள்ள அழகிய மேகலாபரணம் அணிந்த பெண்களால் உண்டாகின்ற காம நோய்மட்டும் இல்லையானால் கொடிய கெடுதி என்னும் சொல்லே இல்லையாகும் நரகத் துன்பமும் இல்லை.

"இருபத்தேழு நாள்களும், புரவி, அடுப்பு, ஆரல், சகடு, மான்றலை, மூதிரை, கழை, கொடிறு, அரவு, கொடுநுகம், கணை, உத்தரம், கை, அறுவை, விளக்கு, முறம், பனை, துளங்கொளி, குருகு, முற்குளம், கடைக்குளம், முக்கோல், காக்கை, செக்கு, நாழி, முரசு, தோணி எனப் பெயர் பெற்றிருந்தன. இவற்றிற்குப் பிற பெயர்களுமுண்டு. இவையல்லாத பொது உடுக்கள் வெள்ளி யெனப்பட்டன. புகைக்கோள் (Comet) வால்வெள்ளி யெனப்பட்டது."
(பாவாணர், பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும் ப. 141).

தூமம் = புகை, கேது = ஒரு கோளின் பெயர் எனல் = புகைக்கோள்.
தூமம் = தூபம், தூபம் போடுதல்.

"வைத்தால் குடுமி, மழித்தால் மொட்டை "
– பழமொழி.

"ஒன்பது பிள்ளைகளுக்கும் ஒரே குடுமி – அது என்ன?" – விடுகதை.
விடை: வெள்ளைப் பூண்டு.

குடுமி – குடுமிக் கூந்தல் போன்ற நீள வாலுடைய விண்மீன் (வால்வெள்ளி, வால்நட்சத்திரம்) – குமுடி – comet. இது மூலம் தெரியவில்லை எனப்படும் சொல்!

comet (n.)
"one of a class of celestial bodies which move about the sun in great, elliptical orbits," c. 1200, from Old French comete (12c., Modern French comète), from Latin cometa, from Greek (aster) komētēs, literally "long-haired (star)," from komē "hair of the head" (compare koman "let the hair grow long"), which is of unknown origin. So called from resemblance of a comet's tail to streaming hair.
Visible only when near the sun, they were anciently regarded as omens of ruin, pestilence, and the overthrow of kingdoms. Halley in 1682 established the fact that many were periodic. Comet-wine (1833), that made in any year in which notable comets have been seen, was reputed to have a superior flavor (the original reference is to the Great Comet of 1811). Related: Cometary; cometic; cometical.

குடுமிக் கூந்தலற்ற வழுக்கைத் தலையைக் குறிக்க இச் சொல்லுடன் எதிர்மறை முன்னொட்டாக 'அ' சேர்த்து 'அகோமியா' எனும் சொல் வழங்கப்படுகிறது.
acomia (n.)
"baldness, want or deficiency of hair," a medical term, by 1860, a coinage in Modern Latin from abstract noun suffix -ia (see -ia) + Latinized form of Greek akomos "hairless, bald," from a- "not, without" (see a- (3)) + komē "hair" (see comet).

*****



'முப்பாலாம் திருக்குறளை' இயற்றியருளிய ஐயன் திருவள்ளுவருக்குப் பெருமை சேர்க்கும் வகையில், முக்கடல் கூடும் கன்னிக்குமரியில் வள்ளுவரின் வானளாவிய முழுவுருவச் சிலை நிறுவியதன் வெள்ளி விழா ஆண்டுக் கொண்டாட்டத்தைத் தமிழ்நாட்டு அரசு முன்னெடுத்து நடத்தியதோடு, தமிழ்நாட்டளவில் திருக்குறளுக்குப்பணியாற்றிவரும் 25 தமிழறிஞர்களுக்குத் 'திருக்குறள் தகைமையாளர்' என்ற பாராட்டுச் சான்றிதழும், 25 ஆயிரம் பரிசுத் தொகையும் வழங்கிச் சிறப்பித்தது.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு. மு.க.ஸ்டாலின் அவர்களிடமிருந்து 'திருக்குறள் தகைமையாளர்' என்ற பாராட்டினைப் பெற்றிருக்கும், செந்தமிழ்ச் சொற்பிறப்பில் அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர் முனைவர் மா. பூங்குன்றன் அவர்களுக்கு அகரமுதலி இயக்ககம் சார்பில் வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

# சொற்பொருண்மை நோக்கில் 'மொழி நிறைபு'



பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

விளக்கவியல் இலக்கணத் தொன்னூலான தொல்காப்பியம் ஆங்காங்கே வெளிப்படையாகவும் குறிப்பாகவும் தமிழ்ப் பொருண்மையியல் கொள்கைகளைச் சுட்டுகின்றது. நுட்பமாக நோக்கின் பெரும்பாலான நூற்பாக்களில் பொருண்மையியல் கொள்கை புதைந்திருக்கும். அதன்படி, மொழி மரபு இயலின்,நெட்டெழுத்து ஏழே ஓரெழுத்தொருமொழி (நூற்பா 10 ) குற்றெழுத்து ஐந்தும் மொழி நிறைபு இலவே (நூற்பா 11 )ஆகிய நூற்பாக்களும், மொழி நிறைபு என்னும் கலைச்சொல்லும் உன்னத்தக்கன.

மொழியின் அனைத்துக் கூறுகளும் பொருண்மை மதிப்புடையன. எழுத்து, சொல்லின் பொருளை வேறுபடுத்துகின்ற ஆற்றலுடையது [அம்மா/ அம்மி]. அதாவது சொல்லின் ஓரெழுத்தை மாற்றினாலும் அந்தச் சொல்லின் பொருள் மாறுபடும். சொல் பொருளாற்றல் உடையது; தொடரின் உறுப்பாக அமைந்து கருத்தை உணர்த்தவல்லது. ஆயினும் தொடர்ச் சூழலை நோக்கியே சொல்லின் பொருளைத் தெளியவேண்டும். இம் மரபில் மேற்படி நூற்பாவிலுள்ள மொழி நிறைபு நோக்கத்தக்கது. அதாவது தமிழ்ச் சொல்லாக்கத்தில் ஓரெழுத்தோ/ பல எழுத்துகளோ முறைப்படி இணைந்து தனித்துப் பொருள் தரக்கூடிய/ தனித்தியங்கக்கூடிய சொல்லை ஆக்கும். ஒரு சொல்லில் ஒரே நெட்டெழுத்து [ ஆ, ஈ, ஐ, கை, தை ] இருக்கலாம்; ஒன்றுக்கும் மேற்பட்ட எழுத்துகள் இடம்பெறலாம் [இடு, படம், வட்டம்]. எவ்வாறாயினும் அந்தச் சொல் பொருள் சுட்டுவதாகவும் தொடரின் உறுப்பாகவும் இயலவல்லதாக அமையவேண்டும் என்பதை மொழி நிறைபு என்னும் கலைச்சொல்லால் தொல்காப்பியம் சுட்டுகின்றது. உயிர்க் குற்றெழுத்துகள் ஐந்தும் இத்தகைய பொருண்மை ஆற்றல் இல்லாதவை. ஆயினும் உயிர்மெய்யெழுத்துகள் [ து, நொ ] , அ, இ, உ ஆகிய சுட்டெழுத்துகள், எ என்னும் வினாவெழுத்து ஆகியன ஓரெழுத்தொருமொழியாக இயங்கவல்லன. இத்தகைய பொருண்மைக் கொள்கையை விளக்குவதாக மொழி நிறைபு அமைகின்றது.

நன்றி : இணையத் தரவுகள்

# அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 171–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 171–ஆவது கூட்டம் 17.12.2024 ஆம் நாள் நடைபெற்றது.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 171–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துர, திரு. அ. மதிவாணன், 'அறிவியல் ஒளி' திங்களிதழ் ஆசிரியர் திரு. நா.சு. சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 181 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :

| | |
|---|---|
| Anti Social Element | குமுகாயப் பகைவன் |
| Audacious Campaign | பொல்லாப் பரப்புரை |
| Bag Scanner | பைத் துருவி |
| Blind Drunk | மிகைக்குடியன் |
| Bounce Back | நிலை மீளல் |
| Cadaverous Countenance | சாக்களைத் தோற்றம் |
| Chief Mentor | முதன்மை நெறிஞர் |
| Cosmopolitan Dress | பெருநகரப் பொலிவாடை |
| Cosmopolitan Environment | உயர்நோக்குச் சூழல் |
| Do Gooder | நற்செயலர் |
| Eco Conscious | சூழலுணர்வு |
| Endless Process | முடிவுறாச் செயல்முறை |

# அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 172–ஆவது கூட்டம்

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 172–ஆவது கூட்டம் 24.12.2024 ஆம் நாள் நடைபெற்றது.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 172–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துர, திரு. அ. மதிவாணன், 'அறிவியல் ஒளி' திங்களிதழ் ஆசிரியர் திரு. நா.சு. சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 140 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :

| | |
|---|---|
| Multi Cuisine | பன்மரபு உணவகம் |
| Multichannel Marketing | பல்முனை விற்பனை |
| Neurocosmetics | உளம்சார் தோல் ஒப்பனை |
| Pandemic Proportion | தொற்றுத் தகவு |
| Pavement Dweller | நடைபாதை வாழுநர் |
| Physical Rehabilitation | உடல் மறுசீராக்கம் |
| Portrait Studio | படவுரு கலைக்கூடம் |
| Q Commerce | விரைவு மின்வணிகம் |
| Screening Scan | துருவித் திரையிடல் |
| Skeletal Framework | என்புருக் கட்டமைப்பு |
| Slapstick Comedy | மெய்ப்பாட்டு நகைச்சுவை |
| Socially Progressive | புதுமை கண்ணோட்டகர் |
| Telecommuting | தொலைவழி அலுவல் |
| Wearable Computer | மெய்யணி கணினி |



# சென்னை 48 ஆவது புத்தகக் காட்சி







27/12/2024 முதல் 12/01/2025 வரை

YMCA உடற் கல்வியியல் கல்லூரி, நந்தனம், சென்னை, கடை எண் 141, 142

வார நாட்களில் மதியம் 2 மணி முதல் இரவு 8.30 மணி வரை
விடுமுறை நாட்களில் காலை 11 மணி முதல் இரவு 8.30 மணி வரை

**தமிழ் வளர்ச்சித் துறை**

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

## விலைப்பட்டியல்

| தொ. எண் | நூல் பெயர் | விலை ரூ. | கழிவு (35%) ரூ. | விற்பனை விலை ரூ. |
|---|---|---|---|---|
| 1. | இரண்டாம் மடலம் 'கா-கூ' முதல் எட்டாம் மடலம் 'வெ-வௌ'வரை (17 தொகுதிகள் ) | 6000/- | 2100/- | 3900/- |
| 2. | ஒன்பதாம் மடலம் இணைப்பு மடலம் (இரண்டு தொகுதிகள்) | 800/- | 280/- | 520/- |
| 3. | பத்தாம் மடலம் அயற்சொல் மடலம் (மூன்று தொகுதிகள்) | 1200/- | 420/- | 780/- |
| 4. | பதினொன்றாம் மடலம் (தமிழ் அகரமுதலி வரலாறு) | 300/- | 105/- | 195/- |
| 5. | பன்னிரண்டாம் மடலம் (தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள்) | 400/- | 140/- | 260/- |
| 6. | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி சுருக்கப்பதிப்பு | 1000/- | 350/- | 650/- |
| 7. | தமிழ் வினைச்சொல் அகரமுதலி | 500/- | 175/- | 325/- |

**விலைப்பட்டியலில் உள்ள நூல்கள் அனைத்தும் புத்தகத் திருவிழாவில் கிடைக்கும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.**

செம்மொழித் தமிழ் காப்போம்!

தமிழ்நாடு அரசு

வாய்மையே வெல்லும்

செந்தமிழால் பேசுவோம் !



தமிழ்நாடு அரசு

தமிழ்வளர்ச்சித் துறை

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்





எண்.75, முதல் தளம், நகர் நிருவாக அலுவலக வளாகம்
சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்
சென்னை–600 028.



Sorkuvai.tn.gov.in


044–22541209





## அகரமுதலித் தொகுதிகள்

## 35% கழிவு விலையில்

## நூல் விற்பனை

| தொ. எண். | நூல் பெயர் | விலை ரூ. | கழிவு (35%) ரூ. | விற்பனை விலை ரூ. |
|---|---|---|---|---|
| 1. | இரண்டாம் மடலம் 'கா–கூ' முதல் எட்டாம் மடலம் 'வெ–வெள' வரை ( 17 தொகுதிகள் ) | 6000/– | 2100/– | 3900/– |
| 2. | ஒன்பதாம் மடலம் இணைப்பு மடலம் (இரண்டு தொகுதிகள்) | 800/– | 280/– | 520/– |
| 3. | பத்தாம் மடலம் அயற்சொல் மடலம் (மூன்று தொகுதிகள்) | 1200/– | 420/– | 780/– |
| 4. | பதினொன்றாம் மடலம் (தமிழ் அகரமுதலி வரலாறு) | 300/– | 105/– | 195/– |
| 5. | பன்னிரண்டாம் மடலம் (தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள்) | 400/– | 140/– | 260/ |
| 6. | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி சுருக்கப்பதிப்பு | 1000/– | 350/– | 650/– |
| 7. | தமிழ் வினைச்சொல் அகரமுதலி | 500/– | 175/– | 325/– |

**புதிய வெளியீடு**

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி**

**திருந்திய பதிப்பு 7 தொகுதிகள்**

**விரைவில் விற்பனைக்கு முன் பதிவு செய்யப்படுகிறது.**

**குறிப்பு :** தொகையை மொத்தமாக அல்லது வங்கி வரைவோலையாக / காசோலையாக "The Director, Directorate of Tamil Etymological Dictionary Project, Chennai – 600 028" எனும் பெயரில் சென்னையில் மாற்றத்தக்க (Payable at Chennai) வகையில் வழங்கலாம் அல்லது மின்னணு முறையில் வழங்கலாம் (through ECS Payment).
IFSC Code : IDIB000K204 Micr Code : 600019175
Account No. 759144235 (Indian Bank, Indira Nagar Branch, Chennai – 20.)

# அகரமுதலித் தொகுதிகள்
# 35% கழிவு விலையில்
# நூல் விற்பனை







27.12.2024 தொடங்கி 12.01.2025 வரை நடைபெற்றுவரும், சென்னை 48ஆவது புத்தகக் காட்சியில், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன அரங்கு எண்கள் 141, 142இல் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடுகள் விற்பனைக்கு வைக்கப்பட்டுள்ளன.




அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் கி. இராமர் அவர்களிடமிருந்து அகராதிகளைத் தமிழன்பர்கள் ஆர்வமுடன் வாங்கிச் சென்று பயன்பெற்றனர்.

